

அருள்மிகு விநாயகர் காரிய சித்தி மாலை

# அருள்மிகு விநாயகர் காரிய சித்தி மாலை
## அருளியவர்: காஶ்யபர்
## மொழிபெயர்த்தவர்: கச்சியப்ப ஶிவாசார்யார்

பந்தம் அகற்றும் அநந்தகுணப் பரப்பும் எவன்பால் உதிக்குமோ

எந்த உலகும் எவனிடத்தில் ஈண்டி இருந்து கரக்குமோ

சந்தமறை ஆகமங் கலைகள் அனைத்தும் எவன்பால் தகவருமோ

அந்த இறையாம் கணபதியை கூரத் தொழுகின்றோம். (1)

உலகமுழுவதும் நீக்கமற ஒன்றாய் நிற்கும்பொருள் எவன்அவ்

உலகிற்பிறக்கும் விவகாரங்கள் உறாதமேலாம் ஒளியாவன்?

உலகம் புரியும் வினைப் பயனை ஊட்டும் களைகண் எவன் அந்த

உலக முதலைக் கணபதியை உவந்து சரணம் அடைகின்றோம். (2)

இடர்கள் முழுதும் எவனருளால் எரிவீழும் பஞ்செென மாயும்

தொடரும் உயிர்கள் எவனருளால் சுரர்வாழ் பதியும் உறச்செய்யும்

கடவுள் முதலோர்க்கு ஊறின்றி கருமம் எவனால் முடிவுறும் அத்

தடவுமருப்புக் கணபதி பொன் சரணம் அடைகின்றோம். (3)

மூர்த்தியாகித் தலமாகி முந்நீர் கங்கை முதலான
தீர்த்தமாகி அறிந்தறியாத் திறத்தினாலும் உயிர்க்கு நலம்
ஆர்த்திநாளும் அறியாமை அகற்றி அறிவிப்பான் எவன் அப்
போர்த்த கருணைக் கணபதியைப் புகழ்ந்து சரணம் அடைகின்றோம். (4)

செய்யும் வினையின் முதல்யாவன் செய்யப்படும் அப்பொருள் யாவன்
ஐயமின்றி உளதாகும் அந்தக் கருமப் பயன் யாவன்
உய்யும் வினையின் பயன் விளைவில் ஊட்டி விடுப்பான் எவன் அந்தப்
பொய்யி இறையைக் கணபதியைப் புரிந்து சரணம் அடைகின்றோம். (5)

வேதம் அளந்தும் அறிவரிய விகிர்தன் யாவன் விழுத்தகைய
வேத முடிவில் நடம் நவிலும் விமலன் யாவன் விளங்குபர
நாதமுடிவில் வீற்றிருக்கும் நாதன்எவன் எண்குணன் எவன்அப்
போதமுதலைக் கணபதியைப் புகழ்ந்து சரணம் அடைகின்றோம். (6)

மண்ணின் ஓர் ஐங்குணமாகி வதிவான் எவன் நீரிடை நான்காய்

நண்ணி அமர்வான் எவன்தீயின் மூன்றாய் நவில்வான் எவன் வளியின்

எண்ணும் இரண்டு குணமாகி இயைவான் எவன் வானிடை ஒன்றாம்

அண்ணல் எவன் அக்கணபதியை அன்பிற் சரணம் அடைகின்றோம். (7)

பாச அறிவில் பசுஅறிவில் பற்றற்கரிய பரன்யாவன்

பாச அறிவும் பசுஅறிவும் பயிலப் பணிக்கும் அவன்யாவன்

பாச அறிவும் பசுஅறிவும் பாற்றி மேலாம் அறிவான

தேசன் எவன் அக்கணபதியைத் திகழச் சரணம் அடைகின்றோம். (8)

**<u>நூற்பயன்</u>**

இந்த நமது தோத்திரத்தை யாவன் மூன்று தினமும் உம்மைச்

சந்தி களில்தோத் திரஞ்செயினும் சகல கரும சித்திபெறும்

சிந்தை மகிழச் சுகம்பெறும்எண் தினம்உச் சரிக்கின் சதுர்த்தியிடைப்

பந்தம் அகல ஓர்எண்கால் படிக்கில் அட்ட சித்தியுறும்.

திங்கள் இரண்டு தினந்தோறும் திகழஒருபான் முறையோதில்

தங்கும் அரச வசியமாம் தயங்க இருபத் தொருமுறைமை

பொங்கும் உழுவ லால்கிளப்பின் பொருவின் மைந்தர் விழுக்கல்வி

துங்க வெறுக்கை முதற்பலவும் தோன்றும் எனச்செப் பினர் மறைந்தார். (9)

